உ

# மாரியம்மன் தாலாட்டு



சென்னை பூமகள் பதிப்பு

1937

உ

எத்தேசங்களிலும் இடைவிடாமல்
சிந்தித்து வருகின்ற

# மாரியம்மன் தாலாட்டு

விநாயகர் துதி காப்பு

பூதலத்தில் யாவர்களும் போதரவா எந்நாளும்
மாதரசி என்று வாழ்த்துகின்ற மாரியம்மன்
சீதரனூர் தங்கை சிறப்பான தாலாட்டைக்
காதலுட னோதக் கணபதிதன் காப்பாமே.

வெண்செந்துறை

முந்திமுந்திவிநாயகரே முக்கணனார்தன்மகனே
கந்தருக்குமுன்பிறந்த கற்பகமேமுன்னடவாய்
வேலவர்க்குமுன்பிறந்த விநாயகரேமுன்னடவாய்
வேம்படியிற்பிள்ளையாரே விக்கினரேமுன்னடவாய்

பேழைவயிற்றோனே பெருச்சாளிவாகனரே
காரணமால்மருகா கற்பகமேமெய்ப்பொருளே
சீரானநல்மருகா செல்வக்கணபதியே
ஒற்றைக்கொம்போனே உமையாள்திருமகனே
கற்றைச்சடையணிந்த கங்காதரன்மகனே
வித்தைக்குவிநாயகரே வெண்ணெயுண்டோன்மருகா
மத்தக்கரிமுகவா மாயோன்மருகோனே
ஐந்துகரத்தோனே யானைமுகத்தோனே
தந்திமதவாரணனே தற்பரனேமுன்னடவாய்
நெஞ்சிற்குடியிருந்து நீயெனக்குமுன்னடவாய்
பஞ்சஞ்சுமெல்லடியாள் பார்வதியாள்புத்திரனே
வேழமுகத்தோனே விநாயகரேமுன்னடவாய்
சடைபுனையுஞ்சங்கரனார் சற்புத்திராவாருமையா[லே
முன்னடக்கும்பிள்ளையார்க்குகண்ணடக்கம்பொன்னா
கண்ணடக்கம்பொன்னாலே காற்சிலம்புமுத்தாலே
முத்தாலேதண்டைகொஞ்ச முன்னடவாய்பிள்ளையா
செல்வக்கணபதியே சீர்பாதம்நான்மறவேன் [ரே

## சரஸ்வதி துதி

தாயேசரஸ்வதியே சங்கரியேமுன்னடவாய்
என்தாயேகலைவாணி ஏகவல்லிநாயகியே
வாணிசரஸ்வதியே என்வாக்கில்குடியிருந்து
என்-நாவிற்குடியிருந்து நல்லோசைதாருமம்மா
கமலாசனத்தாளே காரடிபெற்றவளே
என்-குரலிற்குடியிருந்து கொஞ்சடிபெற்றவளே
என்-நாவுதவறாமல் நல்லோசைதாருமம்மா
மாரியம்மன்தன்கதையை மனமகிழ்ந்துநான்பாட
சரிபாகஎன்னாவில் தங்கிக்குடியிரம்மா
கன்னனூர்மாரிமுத்தைக் கைதொழுதுநான்பாட
பின்னமொன்றுமில்லாமற் புறமிருந்துகாருமம்மா

## மாரியம்மன் துதி

மாயிமகமாயி மணிமந்திரசேகரியே
ஆயிவுமையவளே ஆதிசிவன்தேவியரே

மாரித்தாய்வல்லியரே மகராசிவாருமம்மா
மாயன்சகோதரியே மாரிமுத்தேவாருமம்மா
ஆயன்சகோதரியே ஆஸ்தானமாரிமுத்தே
தாயேதுரந்தரியே சங்கரியேவாருமம்மா
திக்கெல்லாம்போற்று மெக்காலதேவியரே
எக்காலதேவியரே திக்கெல்லாம்நின்றசத்தி
கன்னபுரத்தாளே காரணசவுந்தரியே
காரணசவுந்தரியே நாரணனார்தங்கையம்மா
நாரணனார்தங்கையம்மா நல்லமுத்துமாரியரே
நல்லமுத்துமாரியரே நாககன்னிதாயாரே
உன்-கரகம்பிறந்ததம்மா கன்னனூர்மேடையிலே
உன்-வேம்புபிறந்ததம்மா விஜயநகர்பட்டணமாம்
உன்-சூலம்பிறந்ததம்மா துலங்குமணிமண்டபத்தில்
உன்-சிலம்புபிறந்ததம்மா சிவலிங்கப்பாறையிலே [ம்
உன்-அலகுபிறந்ததம்மா அயோத்திநகர்பட்டணமா
உன்-பிரம்புபிறந்ததம்மா பிச்சாண்டிசந்நிதியாம்

உன்-உடுக்கைபிறந்ததம்மா உருத்திராக்ஷபூமியிலே
உன்-பம்பைபிறந்ததம்மா பளிங்குமாமண்டபத்தில் ।
உன்-கருத்துபிறந்ததம்மா கஞ்சகிரியிந்திரபுரம்
உன்குமாரவர்க்கந்தானழைக்ககொம்பனையேமாரிமு
உனக்கு-மூன்றுகரகமம்மாமுத்தான நற்கரகம் [த்தே
உனக்கு-ஐந்துகரகமம்மா அசைந்தாடும்பொற்கரகம்
உனக்கு-ஏழுகரகமம்மா எடுத்தாடும்பொற்கரகம்
உனக்கு-பத்துகரகமம்மா பதிந்தாடும்பொற்கரகம்
வேப்பிலையும்பொற்கரகமுமாய் வீதிவிளையாடிவர
ஆயிரங்கண்ணுடையாள் அலங்காரிவாருமம்மா
பதினாயிரங்கண்ணுடையாள் பராசத்திவாருமம்மா
துலுக்காணவெல்லையெல்லாம் குலுங்காடப்பெண்பி
றந்தாய், துலுக்காணத்தெல்லைவிட்டு துரந்தரியேவா
ருமம்மா, தாயே துரந்தரியே சங்கரியேவாருமம்மா
மலையாளதேசமெல்லாம்விளையாடப்பெண்பிறந்தாய்
மலையாளதேசம்விட்டு வாருமம்மா இந்தமுகம்
சமைந்தாய்சமையபுரம் சாதித்தாய்கன்னபுரம்

இருந்தாய்விராடபுரம் இனியிருந்தாய்கன்னபுரம்
சமயபுரத்தாளே சாம்பிராணிவாசகியே
சமயபுரத்தெல்லைவிட்டு தாயாரேவாருமம்மா
கன்னபுரத்தாளே காரணசவுந்தரியே
கன்னபுரத்தெல்லைவிட்டு காரணியேவந்தமரும்[தே
கடும்பாடிஎல்லையெல்லாங் காவல்கொண்டமாரிமுத்
ஊத்துக்காடமர்ந்தவளே உதிரபலிகொண்டவளே
படவேட்டமர்ந்தவளே பரசுராமனைப்பெற்றவளே
படவேட்டைவிட்டுமெள்ளப்பத்தினியேவாருமம்மா
பெரியபாளையத்தமர்ந்த பேய்ச்சியெனுமாரியரே
பெரியபாளையத்தைவிட்டுப் பேராசிவாருமம்மா
ஆரணிபெரியபாளையமா மதிலிருக்கும்ஆற்றங்கரை
ஆற்றங்கரைமேடைவிட்டு ஆச்சியரேவாருமம்மா
வீராம்பட்டணமமர்ந்த வேதாந்தமாரிமுத்தே
கோலியனூரெல்லையிலே குதிகொண்டமாரிமுத்தே
அந்தரத்திற்றேரோட அருகேசெடிலசைய
உச்சியிற்றேரோட உயர்ந்தசெடிலசைய

மச்சியிற்றேரோட மகரச்செடிலசைய
பக்கங்கயிறோட பாரச்செடிலசைய
ஆண்டகுருதேசிகரை அறியாதமானிடரை [த்தி
தாண்டிலிட்டு ஆட்டிவைக்கத் தோன்றினாய் நீயொரு
சத்தியாய் நீ அமர்ந்தாய்எருமைகிடாகாவுகொண்டா
உன்னைப்போலதெய்வம் உலகத்தில்கண்டதில்லை[ய்
என்னைப்போல்பிள்ளைகள்தா னெங்குமுண்டுவையக
த்தில், கோத்தமுத்துவட்டமசைய கொங்கைரெண்டும்
பாலொழுக, ஏற்றவர்க்குவரந்தருவாய் எக்காலதேவி
யரே, எக்காலதேவியரே திக்கெல்லாமாண்டவளே
திக்கெல்லாமாண்டவளே திகம்பரியேவாருமம்மா
மூக்கோணசக்கரத்தில் முதன்மையாய் நின்றசத்தி
அக்கோணந்தன்னில்வந்து ஆச்சியரேவந்தமரும்
தாயேதுரந்தரியே சங்கரியேவாருமம்மா
மாயிமருளியரே மணிமந்திரசேகரியே
வல்லாண்மைக்காரியரே வழக்காடும்மாரிமுத்தே
வல்லாரைக்கொன்றாய் நீ வலியவரைமார்பிளந்தாய்

நீலிகபாலியம்மா நிறைந்ததிருச்சூலியரே
நாலுமூலையோமகுண்டம் நடுவேகனகசபை
கனகசபைவீற்றிருக்கும் காரணசவுந்தரியே
காரணசவுந்தரியே நாரணனார்தங்கையரே
நாரணனார்தங்கையரே நல்லமுத்துமாரியரே
நடலைச்சுடலையம்மா நடுச்சுடலைதில்லைவனம்
தில்லைவனத்தெல்லைவிட்டு திரும்புமம்மாயிந்தமுகம்
வார்ப்புச்சிலையாளே வஜ்ஜிரமணித்தேராளே [ன்
தூண்டித்துடைபெருமன் தூண்டிமுள்கைப்பெரும
மண்டையிலேதைத்தமுள்ளு மார்புருகிப்போகுதம்
பக்கத்திற்றைத்தமுள்ளுபதைத்துதுடிக்குதம்மா[மா
தூண்டிமுள்ளைத்தூக்கி துடுக்கடக்குமாரிமுத்தே[மா
தொண்டையிலேதைத்தமுள்தோளுருகிப்போகுதம்
கத்திபோல்வேப்பிலையை கதறவிட்டாய்லோகமெங்
கும், ஈட்டிபோல்வேப்பிலையையினியனுப்பிக்கொண்
டவளே,பத்திரிக்குள்ளிருக்கும்பாவனையையாரறிவா
வேப்பிலைக்குள்ளிருக்கும்வித்தைதனையாரறிவார் [ர்

ஒற்றைச்செடிலாட ஊரனைத்தும்பொங்கலிட
இரட்டைச்செடிலாட இரண்டனைத்தும்பொங்கலிட
பக்கச்செடிலாட படைமன்னர்கொக்கரிக்க
பரமசிவன்வாசலிலே பாற்பசுவுகாவுகொண்டாய்
ஏமனிடவாசலிலே எருமைக்கிடாகாவுகொண்டாய்
எருமைக்கிடாகாவுகொண்டாய் எக்காலதேவியரே
எக்காலதேவியரே திக்கெல்லாமாண்டசத்தி
காசிவளநாட்டாளே கன்னியாகுமரியரே
காசிவளநாட்டைவிட்டு கட்டழகிவாருமம்மா
ஊசிவளநாடு உத்தியாகுமரிதேசம்
அறியாதான்பாடுகிறேன் அம்மைதிருக்கதையை
தெரியாதான்பாடுகிறேன் தேவிதிருக்கதையை
எட்டிரண்டுநானறியேன் ஏழையம்மாவுன்னடிமை
பத்தென்றுலொன்றறியேன் பாலனம்மாவுன்னடி
பாடவகையறியேன் பாட்டின்பயனறியேன் [மை
வருந்தவகையறியேன் வர்ணிக்கப்பேரறியேன்
பேருமறியேனம்மா பெற்றவளேயென்தாயே

குழந்தைவருந்துவது கோவிலுக்குக்கேட்கிலையோ
மைந்தன்வருந்துவது மாளிகைக்குக்கேட்கிலையோ
பாலன்வருந்துவது பார்வதியேகேட்கிலையோ
கோயிலடிமையம்மா கொண்டாடும்பாலனம்மா
மாளிகையைவிட்டு மாதாவேவாருமம்மா
சந்நிதியைவிட்டு தாயாரேவாருமம்மா
அரண்மனையைவிட்டு ஆத்தாளேவாருமம்மா
சந்நிதிமைந்தனம்மா சங்கரியேபெற்றவளே
வருந்தியழைக்கிறேனே வண்ணமுகங்காணாமல்
தேடியழைக்கிறேனே தேவிமுகங்காணாமல்
ஏழைக்குழந்தையம்மா எடுத்தோர்க்குப்பாலனம்மா
பாலன்குழந்தையம்மா பார்த்தோர்க்குப்பாலனம்மா
மைந்தன்குழந்தையம்மா மகாராசிகாருமம்மா
கல்லோஉன்மனது கரையலையோஎள்ளளவும்
இரும்போஉன்மனது இரங்கலையோஎள்ளளவும்
கல்லுங்கரைந்திடுமுன் மனங்கரையாதென்னவிதம்
இரும்புமுருகிடுமுன் னிருதயமுருகாதென்னவிதம்

முன்செய்த தீவினையோ முற்காலத்துப்பயனோ
பெரியோர்செய் தீவினையோ பெற்றவளேசொல்லும
ஏதுமறியேன் ஈஸ்வரியேசொல்லுமம்மா [ம்மா
கடும்பாடியெல்லையிலே கட்டழகிவீற்றிருந்தாய்
கடும்பாடியெல்லைவிட்டு கட்டழகிவாருமம்மா
கரகத்தழகியரே கட்டழகிமாரிமுத்தே
கரகத்துமீதிருந்து கட்டழகிகொஞ்சுமம்மா
கும்பத்தழகியம்மா கோபாலன்தங்கையரே
கும்பத்துமீதிருந்து கொஞ்சுமம்மாபெற்றவளே [ல்
கொஞ்சுமம்மாபெற்றவளே குறைகள்ஒன்றும்வாராம
உனக்கு-பட்டுபளபளென்ன பாடகக்கால்சேருட
முத்துமொளமொளென்ன மோதிரக்கால்சேருட [ய்
உலகமெல்லாமுத்தெடுப்பாய் உள்ளபடிதான்வந்தா
தேசமெல்லாமுத்தெடுப்பாய் தேவிகன்னனூராளே
முத்தெடுத்துதான்புகுந்தாய் உத்தமியேமாரிமுத்தே
உனக்கு-ஈச்சங்குறக்கூடை யிருகட்டும்பொன்னாலே
உனக்கு-தாழங்குறக்கூடை தனிகட்டும்பொன்னாலே

குறக்கூடைமுத்தெடுத்துக்கொம்பனையே நீபுகுந்தாய்
கோயிலின்சந்தடியில் கூப்பிட்டால்கேளாதோ
அரண்மனைசந்தடியில் அழைத்தாலுங்கேளாதோ
மாளிகையின்சந்தடியில் மாதாவேகேட்கிலையோ
மக்களிடசந்தடியோ மருமக்கள்சந்தடியோ
பிள்ளைகள்சந்தடியோ பேரன்மார்சந்தடியோ
அனந்தல்பெருமையோ ஆசாரச்சந்தடியோ
சந்தடியை நீக்கியம்மா தாயாருமிங்கேவர
கொல்லிமலையாண்டவனைக் குமரகுருபரனை
காத்தவராயனைத்தான் கட்டழகிதானழையும்[ழையும்
தொட்டியத்துசின்னனெனுந் துரைமகனைத்தான
மதுரைவீரப்பனையென் மாதாவேதானழையும்
பாவாடைராயனைத்தான் பத்தினியேதானழையும்
கறுப்பண்ணசுவாமியையுங் கட்டழகிதானழையும்
சங்கிலிகறுப்பனைத்தான் சடுதியிற்றானழையும்
முத்தாலுராவுத்தன் முனையுள்ளசேவகனை
பெரியபாளயத்தமர்ந்த பேய்ச்சியெனுமாதாவே

பாளையக்காரியம்மா பழிகாரிமாரிமுத்தே
கன்னனூர்மாரிமுத்தே கலகலென்று நடனமிடும்
உன்னைப்பணிந்தவர்க்கு உற்றதுணை நீயிரம்மா
ஆதிபரமேஸ்வரியே அருகேதுணை நீயிரம்மா
உன்னைப்போல்தெய்வத்தை உலகத்திற்கண்டதில்லை
என்னைப்போல்மைந்தர்பலர்எங்குமுண்டுவையகத்தி
ல், உன்மகிமையறிந்தவர்கள் மண்டலத்தில்யாருமி
உன்சேதியறிவாரோ தேசத்துமானிடர்கள் [ல்லை
உன்மகிமைதானறிந்து மண்டலத்தில்பாடவந்தேன்
மகிமையறியாதுஉலகில் மாண்டமனுகோடியுண்டு
சேதியறியாதுஉலகில் செத்தமனுகோடியுண்டு
தப்புபிழைவந்தாலும் சங்கரியே நீபொறுத்து
ஆறுதப்புநூறுபிழை அடியார்கள்செய்ததெல்லாம்
மனமது நீபொறுத்து மனமகிழ்ச்சியாகவேணும்
தேவிமனம்பொறுத்து தீர்க்கமுடன்ரட்சியம்மா
கொண்டுமனம்பொறுத்துகொம்பனையேகாருமம்மா
காக்கக்கடனுனக்கு காரணசவுந்தரியே

காரடிபெற்றவளே காலுதலைநோகாமல்
வேணுமென்றுகாரடி நீ வேப்பஞ்சிலையாளே
பக்கத்துணையிருந்து பாலகனைக்காருமம்மா
பொரிபோலெழும்பிப் பூரித்துஆலித்து
ஆலித்து நீயெழும்பி ஆத்தாளிறக்குமம்மா
சிரசினில்முத்தையம்மா தற்காத்து நீயிறக்கும்
முகத்தினில்முத்தையம்மா முன்னதாய் நீயிறக்கும்
கழுத்தினில்முத்தையம்மா கட்டழகி நீயிறக்கும்
தோளினில்முத்தையம்மா துரந்தரியே நீயிறக்கும்
மார்பினில்முத்தையம்மா மாதாவே நீயிறக்கும்
வயிற்றினில்முத்தையம்மா மயேஸ்வரியே நீயிறக்கும்
துடையினில்முத்தையம்மா தேவியரே நீயிறக்கும்
முழங்காலில்முத்தையம்மா மீனாட்சி நீயிறக்கும்
கணுக்காலில்முத்தையம்மா காமாட்சி நீயிறக்கும்
பாதத்தில்முத்தையம்மா பாரிலிறக்கிவிடும்
பூமியிலிறக்கிவிடு பெற்றவளேகாருமம்மா
பெற்றவளேஎன்தாயே பேரரசிமாரிமுத்தே

உற்றதுணை நீயிருந்து உகந்தராசிகாருமம்மா
உன்னைவிடப்பூமிதனிலுறுதி துணைவேறுமுண்டோ
பக்கத்துணையிருந்து பாதுகாத்துரட்சியம்மா
செக்கச்சிவந்தவளே செங்கண்ணன் தங்கையரே
மங்கையெனுமாதரசி மகாராசிகாருமம்மா
திங்கள்வதனியரே தேவிகன்னனூராளே
எங்கள்குலத்தேவியரே ஈஸ்வரியேகண்பாரும்
மங்களவிநோதி மாதாவேகண்பாரும்
ஏழைக்கிரங்காமல் இப்படியே நீயிருந்தால்
வாழ்வதுதானெக்காலம் வார்ப்புச்சிலையாளே
ஆயிமகமாயி ஆரணஞ்சொல்காரணியே
மாயிமகமாயி மணிமந்திரசேகரியே
இரங்கிரங்குதாயாரே எங்களைக்காப்பாற்றுமம்மா
மாரித்தாய்வல்லவியே மகராசிகாருமம்மா
வீரணன்சோலையிலே ஆரணமானசத்தி
நீதிமன்னர்வாசலிலே நேராய்க்கொலுவிருந்தாய்
கொலுவிருந்தசத்தியரே கோத்தமுத்துநீயிறக்கு

கோத்தமுத்து நீயிறக்குக் கொம்பனையேமாரிமுத்தே
போட்டமுத்து நீயிறக்கு பொய்யாதவாசகியே
பொய்யாதவாசகியே புண்ணியவதிஈஸ்வரியே
அடங்காதமானிடரை ஆட்டிவைக்கும்மாரிமுத்தே
துஷ்டர்கள்தெண்டனிடத் துடுக்கடக்குமாரிமுத்தே
கண்டவர்கள்தெண்டனிடக் கலக்கமிடுமாரிமுத்தே
அண்டாதபேர்களிட ஆணவத்தைத்தானடக்கி
இராஜாக்களெல்லோரும் நலமாகத்தான்பணிய
மகுடமுடிமன்னர் மனோன்மணியைத்தான்பணிய
கிரீடபணிதரித்த கீர்த்தியுள்ளராஜாக்கள்
பட்டத்துத்துரைகள் படைமுகத்துராஜாக்கள்
வெட்டிக்கெலித்துவரும் வேதாந்தவேதியர்கள்
துஷ்டர்களைத்தானடக்கும் சூலிகபாலியம்மா
அடங்காதமானிடரை அடிமைபலிகொண்டசத்தி
மிஞ்சிவரும்ராட்சதரை வெட்டிவிருதுண்டகண்ணே
தஞ்சமென்றமானிடரைத் தற்காக்கும்பராபரியே
அவரவர்தாம்பணிய ஆக்கினையைப்பெற்றவளே

சிவனுடனேவாதாடும் சித்தாந்தமாரிமுத்தே
அரனுடனேவாதாடும் ஆஸ்தானமாரிமுத்தே
பிரமனுடன்வாதாடும் பெற்றவளேமாரிமுத்தே
விஷ்ணுவுடன்வாதாடும் வேதாந்தமாரிமுத்தே
இயமனுடன்வாதாடும் எக்காலதேவியரே
தேவருடன்வாதாடும் தேவிகன்னனூராளே
கன்னபுரத்தாளே காரணசவுந்தரியே
காரணசவுந்தரியே கர்த்தனிடதேவியரே
நெருப்பம்மாஉன்சொரூபம் நிஷ்டூரக்காரிகையே
அனலம்மாஉன்சொரூபம் ஆஸ்தானமாரிமுத்தே
தணலம்மாஉன்சொரூபம் தரிக்கமுடிபோகாது
அண்டாநெருப்பேயம்மா ஆதிபரமேஸ்வரியே
கர்த்தனைப்பெற்றவளே கட்டழகிமாரிமுத்தே [த்தி
தொட்டிபத்துச்சின்னனைத் தொழுதுவரப்பண்ணச
கறுப்பனையுங்கூடவேதான் கண்டுபணியவைத்தாய்
பெண்ணரசிக்காகப் பிள்ளையைக்கழுவில்வைத்தாய்
ஆணழகிக்காக மைந்தனைக்கழுவில்வைத்தாய்

அடங்காதபிள்ளைஎன ஆண்டவனைகழுவில்வைத்தா
ய், துஷ்டனென்றுசொல்லி துடுக்கடக்கிகழுவில்வை
பாரினில்முத்தையம்மா பத்தினியேதாயாரே [த்தாய்
வாரியெடுக்கவொரு வஞ்சியரையுண்டுபெண்ணாய்
முத்தெடுக்குந்தாதி மோகனப்பெண்ணேயென்று
தாதியரைத்தானழைத்து தாயாரேமுத்தெடுப்பாய்
முத்தெடுத்துத்தான்புகுந்த உத்தமியாள்மாரிமுத்தே
மாயிமகமாயி மணிமந்திரசேகரியே
ஆயிவுமையவளே ஆஸ்தானமாரிமுத்தே
பாரமுத்தை நீயிறக்கிப் பாலகனைக்காருமம்மா
காரடிபெற்றவளே காலுதலைநோகாமல் [தாய்
சொற்கேளாபிள்ளையென்று தூண்டிக்கழுவில்வைத்
கழுதனக்குமோர்வார்க்க கட்டழகியுண்டுபெண்ணாய்
நல்லதங்கையுண்டுபெண்ணாய் நற்கழுக்குமோர்வார்க்க
உரியில்தயிர்வார்க்க உத்தமியுண்டுபெண்ணாய் [மம்மா
உன்னருமகனைக்காத்தாற்போ லிவ்வடிமையைக்காரு
எள்ளளவுநேரமம்மா ஏறெடுத்துப்பாருமம்மா

கடுகளவுநேரமம்மா கண்பார்க்கவேணுமம்மா [ம்மா
கடைக்கண்ணால் நீபார்த்தால்கடைதேறிப்போவேன
பாரளந்தோன் தங்கையரே பாலகனைக்காருமம்மா
பேராசிமாரிமுத்தே பிள்ளைகளைக்காருமம்மா
மகமாயிமாரிமுத்தே மைந்தர்களைக்காருமம்மா
பெற்றவளேமாரிமுத்தே பிள்ளைகளைக்காருமம்மா
ஆணழகிமாரிமுத்தே அடிமைகளைக்காருமம்மா
பூணாரம்பூண்டசத்தி பிள்ளைகளைக்காருமம்மா
பாரமெடுக்கவம்மா பாலகனாலாகுமோதான்
பூணாரந்தானெடுக்க பிள்ளைகளாலாகுமோதான்
வருத்தப்படுத்தாதே மாதாவேகண்பாரும்
பாலன்படுந்துயரம் பாக்கியவதிபார்க்கிலையோ
மைந்தன்படுந்துயரம் மாதாவேபார்க்கிலையோ
குழந்தைபடுந்துயரம் கொம்பனையேபார்க்கிலையோ
சிற்றடிகள்படுந்துயரம் தேவியரேபார்க்கிலையோ
பூணாமுத்திரையைப் பெற்றவளேதானிறக்கு
ஆபரணமுத்திரையை ஆத்தாளிறக்குமம்மா

இரங்கிரங்குந்தாயாரே எங்களைக்காப்பாற்றுமம்மா
அடிமைகளைக்காப்பாற்றி ஆணழகி நீயிறக்கு
கும்பத்துமாரியரே கொலுவிலலங்காரியரே
கொலுவிலலங்காரியரே கோத்தமுத்து நீயிறக்கு
கோத்தமுத்து நீயிறக்கு கொம்பனையேமாரிமுத்தே
மாரியென்றால்மழைபொழியும் தேவியென்றால்தே
ன்சொரியும், தேவியென்றால்தேன்சொரியும் திரிபுர
திரபுரசுந்தரியே தேசத்துமாரியரே [சுந்தரியே
பொன்னுமுத்துமாரியரே பூரணசவுந்தரியே
தாயாரேபெற்றவளே சத்தகன்னிசுந்தரியே
பேருமறியேனம்மா பெற்றவளேதாயாரே
குருடன்கைக்கோலென்று கொம்பனையே நீயறிவாய்
கோலைப்பிடுங்கிக்கொண்டால்குருடன்பிழைப்பானோ
இப்படிக்கு நீயிருந்தா லினிபிழையோந்தாயாரே
கலிபிறக்குமுன்பிறந்த கனத்ததோர்மாரிமுத்தே
யுகம்பிறக்குமுன்பிறந்த உத்தண்டமாரிமுத்தே
கலியுகத்தில்தாயே கண்கண்டதெய்வம் நீ

உன்னைப்போல்தெய்வம் உலகத்தில்கண்ட தில்லை [ல்
என்னைப்போல்மைந்தர் தானெங்குமுண்டுவையகத்தி
அனலைமதியாய் நீ யாவரையுஞ்சட்டைபண்ணாய்
புனலைமதியாய் நீ பூலோகஞ்சட்டைபண்ணாய்
வருந்தியழைக்கிறேனுன் திருமுகத்தைக்காணாமல்
பாலகனைக்காத்து பாதத்தாலுதைத்துவிடு
மைந்தனைக்காத்து மகாராசிவுதைத்துவிடு
குழந்தையைக்காத்துக் கொம்பனையேயுதைத்துவிடு
ஆதிபரஞ்சோதி அங்குகண்ணேவாருமம்மா
வெள்ளிக்கிழமையிலே கொள்ளிக்கண்மாரியரே[யப்
வெள்ளியிலும்திங்களிலும்வேண்டியபேர்பூசைசெய்
பூசைமுகத்திற்குப் போனேனென்றுசொல்லாதே
இந்தமனையிடத்தி லீஸ்வரியேவந்தருள்வாய்
வந்தமனைவாழுமம்மா இருந்தமனையீடேறும்
இருந்தமனையீடேற ஈஸ்வரியேவந்தருள்செய்
கண்பாரும்கண்பாரும் கனகவல்லித்தாயாரே
நண்பானபிள்ளைகளை நலிந்திட நீசெய்யாதே

உன்னை நம்பினோரை ஓய்ந்துவிடச்செய்யாதே
அந்நீதஞ்செய்யாதே ஆயிமகமாயி
வேம்புரதமேறி வித்தகியேவாருமம்மா
பச்சிலைரதமேறி பார்வதியேவாருமம்மா
கொலுவிலிருந்தசத்தி கோத்தமுத்தை நீயிறக்கு
போட்டமுத்தை நீயிறக்கு பூலோகமாரிமுத்தே
கேளிக்கையாகக் கிளிமொழியேமுத்திறக்கு
அரும்பாலகன்றன்னை அவஸ்தைப்படுத்தாதே
வருத்தப்படுத்தாதே மாதாவேகண்பாரும்
அன்னமிறங்கவம்மா ஆத்தாளேகண்பாரும்
ஊட்டத்தை நீகொடுத்து உத்தமியேகாருமம்மா
இறக்கங்கொடுத்து ஈஸ்வரியேகாருமம்மா
காருமம்மாபெற்றவளே காலுதலைநோகாமல் [தே
எங்கேயோபராமுகமா யிருந்தேனென்று சொல்லா
அந்திசந்திபூசையிலே அசதியாயெண்ணாதே
ஒட்டாரம்பண்ணாதே ஓங்காரமாரிமுத்தே
பாவாடம்நேருமம்மா பழிகள்வந்துசேருமம்மா

பாவாடம்நேர்ந்ததென்றால் பாருலகுவற்காது
கண்டார்நகைப்பார்கள் கலியுகத்தாரேசுவார்கள்
கலியுகத்தாரேசுவார்கள் கட்டழகிமாரிமுத்தே
பார்த்தார்நகைப்பார்கள் பரிகாசம்பண்ணுவார்கள்
உதடுபடைத்தவர்கள் உதாசினஞ்சொல்லுவார்கள்
பல்லைப்படைத்தவர்கள் பரிகாசம்பண்ணுவார்கள்
நாவைப்படைத்தவர்கள் நாணயங்கள்சொல்லுவார்
பார்த்தார்நகைக்கவம்மா பரிகாசம்பண்ணாதே [கள்
கச்சிப்பதியாளே காமாட்சித்தாயாரே
தாயாரேபெற்றவளே தயவுவைத்துக்காருமம்மா
மாதாவேபெற்றவளே மனம்பொறுத்துக்காருமம்மா
பார்வதியேபெற்றவளே பக்ஷம்வைத்துக்காருமம்மா
ஆயிரங்கண்ணுடைய அலங்காரிவாருமம்மா
பதினாயிரம்முத்தினிலே பார்த்தெடுத்தவாணிமுத்து
நூறாயிரம்முத்தினிலே நூற்றெடுத்தவாணிமுத்து
ஆயிரங்கண்முத்துதனி லாத்தாள்வளர்ந்தெழுந்தா
நாகத்தின்கண்ணேயம்மா நல்லவிடைப்பாம்பே [ள்

சேஷத்தின்கண்ணேயம்மா சின்னவிடைப்பாம்பே
அஞ்சுதலைநாகமம்மா கொஞ்சிவிளையாடுதம்மா
பத்துதலைநாகமம்மா பதிந்துவிளையாடுதம்மா
செந்தலைநாகமம்மா சேர்ந்துவிளையாடுதம்மா
கருந்தலைநாகமம்மா காக்குதம்மாவுன்கொலுவில் [தி
சேஷனென்றபாம்பையெல்லாம் சேரவேபூண்டசத்
நாகம்என்றபாம்பையெல்லாம்நலமாகப்பூண்டசத்தி
அரவமெனும்பாம்பையெல்லா மழகாகபூண்டசத்தி
ஆபரணமாய்ப்பூண்டாய் அழகுள்ளபாம்பையெல்
நாகங்குடைபிடிக்க நற்பாம்புதாலாட்ட [லாம்
பூணாரமாய்ப்பூண்டாயுன் பொன்னுதிருமேனியெல்
தாலாட்டத்தாலாட்டத் தாயார்மனமிரங்க [லாம்
சேஷன்குடைகவியச் செந்நாகம்வட்டமிட
வட்டமிட்டுவீற்றிருந்தாய் மாரிகன்னனூராளே
மார்மேலேநாகமம்மா மடிமேல்புரண்டாட
தோள்மேலேநாகமம்மா துடைமேற்புரண்டாட
மார்மேலுந்தோள்மேலும் வண்ணமடிமேலும்

கொஞ்சிவிளையாடுதெம்மா கோபாலன்தங்கையரே
ஏழையாலாகுமோதான் ஈஸ்வரியைத்தோத்திரிக்க
குழந்தையாலாகுமோதான் கொம்பனையைதோத்திரி
க்க, அடியேனாலாகுமோதான் ஆத்தாளைத்தோத்திரி
க்க, எந்தனாலாகுமோதான் ஈஸ்வரியைத்தோத்திரி
க்க, இல்லையென்பார்பங்கில் ஈஸ்வரியேமாரிமுத்து
நில்லாயரை நாழி நிஷ்டூரத்தாண்டவியே
உண்டென்பார்பங்கில் வொளிவிளக்காய் நின்றசத்தி
பார்த்தோர்க்குசெல்வனம்மா பாலன்குழந்தையம்மா
உன்னைப்பகைத்தோர்க்கு உறுமார்பிலாணியம்மா
நினைத்தோர்க்குத்தெய்வமம்மா எதிர்த்தார்க்குமார்பி
தாயே நீவாருமம்மா தற்பரையாய் நின்றசத்தி[லாணி
வாக்கிட்டால்தப்பாது வரங்கொடுத்தால்பொய்யாது
பொய்யாதுபொய்யாது பூமலர்தான்பொய்யாது
பூவிரண்டுபூத்தாலும் நாவிரண்டுபூக்காது
மறவரிடவாசலிலே மல்லிகைப்பூபூத்தாலும்
மறவரறிவாரோ மல்லிகைப்பூவாசனையை

குறவரிடவாசலிலே குடமல்லிபூத்தாலும்
குறவரறிவாரோ குடமல்லிவாசனையை
பன்றிமுதுகினில் பன்னீரைப்பூசினாக்கால்
பன்றியறியுமோதான் பன்னீரின்வாசனையை
என்னாலேயாகுமோதான் ஈஸ்வரியைத்தோத்திரிக்க
மைந்தனாலாகுமோதான் மாதாவைநமஸ்கரிக்க
பிள்ளையாலாகுமோதான் பெற்றவளைநமஸ்கரிக்க
பாலனாலாகுமோதான் பார்வதியைநமஸ்கரிக்க
எச்சிலொருகோடி இளந்தீட்டுமுக்கோடி
தீட்டுமொருகோடி தெருவெங்குந்தானுமுண்டு
கன்னிகள்தீட்டு கலந்தோடிவந்தாலும்
ஆறுதப்பு நூறுபிழை அடியார்கள்செய்தாலும்
தாயேமனம்பொறுத்துத் தயவாகக்காருமம்மா
எச்சிற்கலந்ததென்று இடையப்போய் நிற்காதே
தீட்டுக்கலந்தாலும் தேவிமனம்பொறுத்து
எச்சிற்கலந்தாலும் ஈஸ்வரியேமனம்பொறுத்து
பக்ஷம்வைத்துகாருமம்மாபராபரியே அங்குகண்ணே

விருப்பம்வைத்துக்காருமம்மா விருதுபடைத்தசத்தி
நீலிகபாலியம்மா நிறைந்தபஞ்சாட்சரியே
சூலிகபாலியம்மா சுந்தரியேமாரிமுத்தே
நிஷ்டூரக்காரியரே விஸ்தாரமுள்ளசத்தி
வேப்பிலையால்தான்தடவி விசிறிமுத்தழித்துவிடு
ஆனபராசத்தியரே யம்மைமுத்தழித்துவிடு
இரங்கிரங்குந்தாயாரே ஈஸ்வரியேநான்பிழைக்க
படவேட்டமர்ந்தவளே பரசுராமனைப்பெற்றவளே
ஊத்துக்காடமர்ந்தவளே உதிரபலிகொண்டவளே
வீராமபட்டணமமர்ந்த வேதாந்தமாரிமுத்தே
சமைந்தாய்சமையபுரம் சாதித்தாய்கன்னபுரம் [ரே
கன்னபுரத்தெல்லையெல்லாம் காவல்கொண்டமாரிய
எக்காலதேவியரே ஈஸ்வரியேயிறங்குமம்மா
திக்கெல்லாம்பேர்படைத்த தேசத்துமாரியரே
அண்டபுவனமெல்லாம் துண்டரிக்கமுள்ளசத்தி
கச்சிப்பதியாளே காமாட்சிதாயாரே
கைலாசலோகமெல்லாம் காவல்கட்டியாண்டவளே

பாதாளலோகமெல்லாம் பரதவிக்கப்பண்ணுஞ்சத்தி
காலைக்கொலுவிலம்மா காத்திருந்தாராயிரம்பேர்
உச்சிக்கொலுவிலம்மா உகந்திருந்தாராயிரம்பேர்
அந்திக்கொலுவிலம்மா அமர்ந்திருந்தாராயிரம்பேர்
கட்டியக்காரரெல்லாம் கலந்தெச்சரிக்கைபண்ணப்
பாடும்புலவரெல்லாம் பண்பிசைத்தாடல்சொல்ல
வடுகர்துலுக்கரம்மா மராட்டியர்கன்னடியர்
கன்னடியர்காவலுடன் கர்ணாட்டுப்பட்டாணியர்
இட்டசட்டைவாங்காத இடும்பரெல்லாங்காத்திருக்க
போட்டசட்டைவாங்காத பொந்திலியர்காத்திருக்க
வடுகர்துலுக்கரம்மா மறுதேசப்பட்டாணியர்
வேடிக்கைபார்த்திருந்தாள் வேப்பஞ்சிலையாளும்[ து
கேளிக்கைபார்த்திருந்தாள்கிளிமொழியாள்மாரிமுத்
மாயமெல்லாமுன்மாயம் மருளரெல்லாமுன்மருளர்
மருளர்தழைக்கவம்மா மருமக்களீடேற
பொலிசட்டிதானெடுக்கும் புத்திரர்கள்தான்றழைக்க
வேதங்கள்தாம்தழைக்க விண்ணவர்களீடேற

குமாரவர்க்கந்தான்தழைக்க கொம்பனையேகண்பாரு
மைந்தர்கள்தான்தழைக்க மாதாவேகண்பாரும் [ம்
காஞ்சிபுரியிலேதான் கர்த்தரையும்நீநினைத்து
கர்த்தரையும்நீநினைத்து காமாட்சிபூசைபண்ணாய்
கங்கைமுழுகியம்மா கிளிமொழியேதவமிருந்தாய்
வைகைமுழுகியம்மா வனமயிலேதவமிருந்தாய்
பொய்கைமுழுகியம்மா பெற்றவளேதவமிருந்தாய்
தவத்தில்மிகுந்தவளே சத்தகன்னிதாயாரே
ஆற்றுமணலெடுத்து அரனுரையுண்டுபண்ணாய்
சேற்றுமணலெடுத்துச் சிவனுரையுண்டுபண்ணாய்
கம்பைநதிக்கரையில காமாட்சிதவமிருந்தாய் [ய்
இருநூற்றுக்காதவழி திருநீற்றல்கோட்டையிட்டா
திருநீற்றல்கோட்டையிட்டாய் திகம்பரியேமாரிமு
அருணாசலந்தனிலே ஈசான்யமூலையிலே [த்தே
திருவண்ணாமலையிலேதான் தேவிதவமிருந்தாய்
அருணாசலந்தன்னிலே ஆத்தாள்தவமிருந்தாய்
ஈசான்யமூலையிலே இருந்தாய்பெருந்தபசு

இருந்தாய்பெருந்தபசு இடப்பாகம்பேறுபெற்றாய்
இடப்பாகம்பேறுபெற்ற ஈஸ்வரியேமாதாவே
காகமுதுகினிற் கதம்பப்பொடிபூசிவைத்தால்
காகமறியுமோதான் கதம்பப்பொடிவாசனையை
கொக்குமுதுகினில் கோமேதகம்கட்டிவைத்தால்
கொக்குமறியுமோதான் கோமேதகத்தினொளியை
மூலக்கனலதனில் முதன்மையாய் நின்றசக்தி
பாலனுக்குவந்த பாரயெரிச்சல்களில்
காலெரிவுகையெரிவு கட்டழகிவாங்குமம்மா
குத்தல்குடைச்சலொடு குலைமாரிடிநோவு
மண்டைக்குடைச்சலொடு மாரடைப்புத்தலைநோவு
வாதபித்தசீதசுரம் வல்பிணியைவாங்குமம்மா
இடுப்புக்குடைச்சலைத்தா னீஸ்வரியேவாங்குமம்மா
பித்தயெரிவுகளைப் பெற்றவளேவாங்குமம்மா
கழுத்துவலியதனைக் கட்டழகிவாங்குமம்மா
பத்திரியால்தான்தடவி பாரமுத்தழித்துவிடு
விபூதியைப்போட்டு இறக்கிவிடுமுத்திரையை

வேப்பிலைபட்டவிடம் வினைகள்பறந்தோடுமம்மா
பத்திரிபட்டவிடம் பாவம்பறந்தோடுமம்மா
விபூதிபட்டதக்ஷணமே வினைகள்பறந்தோடுமம்மா
பஞ்சாக்ஷரம்பட்டால் பாவங்கள் தீர்ந்துவிடும் [மை
பத்தென்றுலிரண்டறியேன் பாலனம்மாவுன்னடி
எட்டென்றுலிரண்டறியேன் ஏழையம்மாவுன்னடி
நாகத்தின்கண்ணேயம்மா நல்லவிடைப்பாம்பே[மை
சேஷத்தின்கண்ணேயம்மா சின்னவிடைப்பாம்பே
வேம்பேதலைக்கணைதான்வேப்பிலையேபஞ்சுமெத்தை
வேப்பம்பாலுண்டவளே வேதாந்தமாரிமுத்தே
ஐந்நூறுபாம்புனக்கு அள்ளிவிட்டவீரஜடை
முந்நூறுசந்தி முதற்சந்தியுன்னுதென்றாய்
நானூறுசந்தி நடுச்சந்தியுன்னுதென்றாய்
சந்திக்குச்சந்தி தனிச்சந்தியுன்னுதென்றாய்
வீதிக்குவீதி வெளிச்சந்தியுன்னுதென்றாய்
பட்டத்தழகியம்மா படைமுகத்துராஜகன்னி
கன்னபுரத்தாளே காரணசவுந்தரியே

திருவிளக்குநாயகியே தேவிகன்ன னூராளே
மணிவிளக்குமேலிருந்து மாதாவேகொஞ்சுமம்மா
விளக்கிற்குடியிருந்து மெல்லியரேகொஞ்சுமம்மா
திருவிளக்குமேலிருந்து செல்வியேகொஞ்சுமம்மா
கொஞ்சுமம்மாபெற்றவளே கோபாலன்தங்கையரே
சிரித்தார்முகத்தையம்மா செல்லெரிக்கக்கண்டிடுவா
பரிகாசஞ்செய்தவரைப் பல்லைப்பிடுங்கிவைப்பாய் [ய்
உதாசினம்சொன்னவரை ஒருகண்பிடுங்கிவைப்பாய்
மூலைவீட்டுப்பெண்களைத்தான் முற்றத்திலாட்டிடுவா
ய், அரண்மனைபெண்களைத்தா னம்பலத்திலாட்டிடு
வாய்,பார்ப்பாரபெண்களைத்தான் தோற்பாதங்காட்டி
டுவாய், தோற்பாதங்காட்டிடுவாய் துரந்தரியேமாதா
வே, நடுவீதியிற்கொள்ளிவைத்து நானறியேனென்
றிடுவாய், கடியாவிஷம்போல கடிக்கவிட்டுப்பார்த்தி
ருப்பாய், தீண்டாவிஷம்போல தீண்டவிட்டுப்பார்த்
திருப்பாய், பாம்புகண்ணி நீலியம்மாபழிகாரிமாரிமு
த்தே, தாயேதுரந்தரியே சர்வலோகமாதாவே

ஆருதகோபமெல்லாம் ஆச்சியரோவிட்டுவிடு
கடலில்முழுகியம்மா கடுகி நீவாருமம்மா
காவேரிதான்முழுகிக் காமாட்சிவாருமம்மா
வந்தமனைவாழுமம்மா இருந்தமனையீடேறும்
கஞ்சாவெறியன் கள்வெறியன்பாவாடை
சாராயவெறியன் தனவெறியன்பாவாடை
பாவாடைராயனைத்தான் பத்தினியேதானழையும்
தாயாரும்பிள்ளையுமாய்த் தான்காக்கவேணுமம்மா
மாதாவும்பிள்ளையுமாய் மனதுவைத்துக்காருமம்மா
ஆத்தாளும்பிள்ளையுமாய் அன்புவைத்துக்காருமம்
காரடிபெற்றவளே காலுதலைநோகாமல் [மா
காசிவளநாட்டைவிட்டுக் காரணியேவந்தமரும்
ஊசிவளநாட்டைவிட்டு உத்தமியேவந்தமரும்
பம்பைமுழங்கிவரப் பறைமேளமார்ப்பரிக்க
சிற்றுடுக்கைகொஞ்சிவரச் சிறுமணிகளோலமிட
வேடிக்கைபார்த்திருப்பாள் வேப்பஞ்சிலையாளும்[து
கேளிக்கைபார்த்திருப்பாள்கிளிமொழியாள்மாரிமுத்

சமயபுரத்தாளே சாம்பிராணிவாசகியே [தி
முக்கோணத்துள்ளிருந்து முதன்மையாய் நின்றசத்
நாற்கோணத்துள்ளிருக்கும் நல்லமுத்துமாரியரே
பஞ்சாட்சரப்பொருளே பார்வதியேபெற்றவளே
அறுகோணத்துள்ளிருக்கும் ஆதிபரமேஸ்வரியே
அஷ்டாக்ஷரப்பொருளே ஆனந்தமாரிமுத்தே
நாயகியேமாரிமுத்தே நாரணனார் தங்கையரே
நாரணனார் தங்கையரே நடனமிடும்பார்வதியே
ஐம்பத்தோரக்ஷரியே ஆதிசிவன்தேவியரே
ஆதிசிவன்தேவியரே அம்மைமுத்துமாரியரே
பேருலகரட்சகனும் பெருமாளுடன்பிறப்பே
பெருமாளுடன்பிறந்து பேருலகையாண்டவளே
மாயனுடன்பிறந்து மண்ணுலகையாண்டவளே
ஆயனுடன்பிறந்து அம்மைமுத்தாய் நின்றவளே
திரிகோணத்துள்ளிருக்கும் திரிபுரசுந்தரியே
ஆறுதாரப்பொருளே அபிஷேகப்பத்தினியே
மூலாதாரப்பொருளே முன்பிறந்ததேவதையே

தாயேதுரந்தரியே சர்வலோகேஸ்வரியே
பத்திரியால்தான்தடவி பாரமுத்தைத்தானிறக்கும்
வேப்பிலையால்தான்தடவி மெல்லியரேமுத்திறக்கும்
மேனியெல்லாந்தான்குளிர விளையாடிமுத்திறக்கும்
இறக்கிறக்குந்தாயாரே எங்களைக்காப்பாற்றுமம்மா
முத்திலுமுத்து முகத்திலிடுமோணிமுத்து
எங்கும்நிறைந்தமுத்து எல்லோருக்கும்மாரிமுத்து
பெண்ணாய்ப்பிறந்து பேருலகையாளவந்தாய்
பேருலகையாளவந்த பெண்ணரசிமாரிமுத்தே
நித்தம்பராமரிக்க நிஷ்டூரிபெண்பிறந்தாய்
தேசம்பராமரிக்கத் தெய்வகன்னி நீபிறந்தாய்
கிளியேந்தும்நாயகியே கிளிமொழியேதாயாரே
நித்தியகலியாணி நீலிபரஞ்சோதி
அம்மணிபார்வதியே ஆணிமுத்துத்தாயாரே
லோகமெல்லாமுத்தளக்கும் லோகபரமேஸ்வரியே
வெற்றிக்கொடிபறக்க விருதுபம்பைதான்முழங்க
எக்காளமூத எங்கும்கிடுகிடென்ன

பஞ்சவர்ணடால்விருது பக்கமெல்லாஞ்சூழ்ந்துவர
நாகசுரமேளம் நாட்டியங்களாடிவர
தப்பட்டைமேளம் தனிமுரசுதான்முழங்க
காளங்களூதிவரக் கவிவாணரெச்சரிக்க
சின்னங்களூதிவரச் சிறப்பாய்க்கொடிபிடிக்க
ஜண்டாசிலர்பிடிக்கத் தனிமுரசுதானடிக்க
கொடிகள்சிலர்பிடிக்கக் கொக்கரிப்பார்வீரமக்கள்
தாமரைகள்தான்வீசச் சந்திப்பார்வீரமக்கள்
தாரைபூரிசின்னம் ஆரபாரமாய்முழங்க
நன்குமடியுஞ்சுதியும் நன்றாகவூதிவர
தம்புருவீணை தக்கபடிவாசிக்க
பம்பையடித்துவரப் பரமேளந்தானதிர
கென்செட்டுவாத்தியமும் கிளார்நெட்டுவாத்தியமும்
கொடிவாத்தியம்புதிதாய் கொண்டுவந்தாருன்மக்கள்
இத்தனைவாத்தியமும் இசைக்கின்றார்பாருமம்மா
பார்த்துக்குளிருமம்மா பாங்கானவுன்மனது
எப்படியாகிலுந்தா னேழைகளீடேறக்

கண்டாரும்கண்பாரும் காரணசவுந்தரியே
இந்திரனுக்கொப்பாக யிலங்குமகமாரியரே
கும்பத்தழகியம்மா கொலுமுகத்துராஜகன்னி
சகலகுற்றம்சகலபிழை தாயாரே நீபொறுப்பாய்
வணங்குகின்றமக்களுக்கு வாழ்வுமிகவளிப்பாய்
ஓங்காரரூபியென்று உன்னையேதோத்திரிக்க
படவேட்டில்வீற்றிருக்கும் பரஞ்சோதித்தாயாரே
ஆரறிவாருன்மகிமை ஆணிமுத்துத்தாயாரே
அண்டபுவனமெல்லாம் அம்மாவுனைத்தொழுவார்
தேசங்களெங்குந் தேவியைத்தோத்திரிப்பார்
எள்ளுக்குளெண்ணெய்போ லெங்கும்நிறைந்தசத்தி
எங்கும்நிறைந்தவளே எல்லோர்க்குந்தாயாரே
அஞ்சலென்றவஸ்தமொடு அடியார்தமைக்காக்க
வேப்பிலையாங்கையிலே விபூதியெங்குந்தூளிதமாம்
கருணைகடாட்சம்வைத்துக் காக்குமகமாயிவுந்தன்
சரணாரவிந்தமதைத் தந்தருளுமாரிமுத்தே
உன்பேர் நினைத்தால்பில்லி பிசாசும்பறந்தோடுமம்மா

சூனியமும்வைப்புஞ் சுழன்றலைந்தோடுமம்மா
பாதாளவஞ்சனமும்பறந்துவிடுமுன்பேர் நினைத்தால்
கானகத்தில்வீற்றிருக்கும் கன்னனூர்மாரிமுத்தே
சத்தகன்னிமாதாவே சங்கரிமனோன்மணியே
சூலங்கபாலமுடன் துய்படமரகமும்
ஓங்காரரூபமம்மா ஒருவரறிவாரோ
மகிமையறிவாரோ மானிடர்கள்யாவருந்தான்
அடியார்தமைக்காக்கு மாயிபரம்பரியே
அடியார்கள்செய்தபிழை ஆச்சியரே நீபொறுப்பாய்
கோயிலடிமையம்மா கொண்டாடும்பாலகண்டி
சந்நிதிபிள்ளையைத்தான் தற்காரும்பெற்றவளே
உன்னையல்லால்வேறு துணை ஒருவரையுங்காணேன
வருந்துவார்பங்கில் வலமாய்க்குடியிருப்பாய் [ம்மா
பாவாடைக்காரியரே பராபரியேஅங்குகண்ணே
உண்ணுகின்றதேவதைகளுடுத்துகின்றதேவதைகள்
கட்டுபட்டதேவதைகள் காக்கின்றதேவதைகள்
இந்தமனையிடத்தி லிருந்துண்ணுந்தேவதைகள்

சாம்பிராணிதூபத்திற் குட்பட்டதேவதைகள்
அனைவோரும்வந்திருந்து அடியாரைக்காக்கவேணு
ஓராம்படித்தளமாம் ஓலைப்பூமண்டபமாம் [ம்
ஓலைப்பூமண்டபத்தி லுகந்துகொலுவிருந்தாள்
இரண்டாம்படித்தளமாம் இரத்தினசிம்மாதனமாம்
இரத்தினசிம்மாதனத்தி லிருந்தரசுதான்புரிவாள்
மூன்றாம்படித்தளமாம் மூனைமுகப்பூஞ்சாலைகளாம்
மூனைமுகப்பூஞ்சாலைகளில்முந்திக்கொலுவிருந்தாள்
நான்காம்படித்தளமாம் நவரத்தினமண்டபமாம்
நவரத்தினமண்டபத்தில் நாயகியும்வந்தமர்ந்தாள்
ஐந்தாம்படித்தளமாம் அழகியசிம்மாதனமாம்
அழகியசிம்மாதனத்தி லாயிகொலுவிருந்தாள்
ஆறும்படித்தளமாம் அலங்காரச்சாவடியாம்
அலங்காரச்சாவடியில் ஆச்சியரும்வந்திருந்தாள்
ஏழாம்படித்தளமாம் எழுதியசிம்மாதனமாம் [ள்
எழுதியசிம்மாதனத்தி லீஸ்வரியாள்கொலுவிருந்தா
எட்டாம்படித்தளமாம் விஸ்தாரமேடைகளாம்

விஸ்தாரமேடைதனில் விமலியரும்வந்தமர்ந்தாள்
ஒன்பதாம்படித்தளமாம் ஒருமுகமாய் நின்றசக்தி
ஒருமுகமாய் நின்றசக்திஉத்தமியும்கொலுவிருந்தாள்
பத்தாம்படித்தளமாம் பளிங்குமாமண்டபமாம்
பளிங்குமாமண்டபத்தில் பத்தினிகொலுவிருந்தாள்
ஆத்தாள்கொலுவிலே ஆரார்கொலுவிருந்தார்
ஐங்கரனும்வல்லபியும் அன்பாய்க்கொலுவிருந்தார்
தொந்திவயிற்றோனும் துந்துபியுங்கொலுவிருந்தார்
குழந்தைவடிவேலன் குமரேசர்தாமிருந்தார்
தோகைமயிலேறுஞ் சுப்ரமண்யர்கொலுவிருந்தார்
சிங்கவாகனமேறுந் தேவிகொலுவிருந்தாள்
ஊர்காக்குங்காளி உத்தமியாள்கொலுவிருந்தாள்
துர்க்கையொடுகாளி தொடர்ந்துகொலுவிருந்தாள்
வள்ளிதெய்வானையுடன் மகிழ்ந்துகொலுவிருந்தாள்
பச்சைமலைநாயகியாள் பசுங்கிளியாள்தானிருந்தாள்
பூவைக்குறத்தியரும் பொருந்திக்கொலுவிருந்தாள்
வாள்முனியுஞ்செம்முனியும் வந்துகொலுவிருந்தார்

காத்தான்கறுப்பனோடு கட்டழகர்வீற்றிருந்தார் [தார்
தொட்டியத்துச்சின்னானும் துரைமகனுந்தாமிருந்
மருமக்களெல்லோரும் மகிழ்ந்துகொலுவிருந்தார்
குமரர்களெல்லோரும் கூடிக்கொலுவிருந்தார்
ஆரியமாலையுடனனைவோரும்வீற்றிருந்தார்
ஆயன்பெருமாளனந்தசயனனெனும்
மாயன்பெருமாள் மங்கைமணவாளன்
ஐவரைக்காத்த ஆதிநெடுமாலும்
பஞ்சவரைக்காத்த பாரளந்தோன்தாமிருந்தார்
கொற்றவரைக்காத்த கோபாலர்தாமிருந்தார்
முட்டையிற்குஞ்சு முகமறியாப்பாலகரை
பிட்டுவளர்த்தெடுத்த பெருமாள்கொலுவிருந்தார்
செட்டையிற்காத்த ஜெயராமர்கொலுவிருந்தார்
அலர்மேலுமங்கையம்மாள் அரிராமர்சீதையரும்
மங்கைபொடுலட்சுமியும் மகிழ்ந்துகொலுவிருந்தார்
சீதேவிபூதேவி சேர்ந்துகொலுவிருந்தார்
பாஞ்சாலனெக்கியத்தில் பதுமைபோல்வந்துதித்த

பத்தினியாள் துரோபதையும்பாரக்கொலுவிருந்தார்
தளராதனஞ்செயரும் தருமருங்கொலுவிருந்தார்
வாயுதேவன்புத்திரனார் மதகரியுந்தாமிருந்தார் [தார்
தேவேந்திரன்புத்திரனார் தேர்விஜயன்கொலுவிருந்
நகுலசகாதேவர் நலமாய்கொலுவிருந்தார்
கானக்குயிலழகர் கட்டழகரைவர்களும்
ஐவர்களுங்கூடி அன்பாய்க்கொலுவிருந்தார்
பட்டத்தரசி பைங்கிளியாள்சுபத்திரையும்
ஆயன்சகோதரியா ளாரணங்குவீற்றிருந்தாள்
அந்தமுள்ளசுந்தரியா ளானகுந்தியல்லியரும்
மலையனூர்தானமர்ந்த மாரிகொலுவிருந்தார்
கைச்சூலம்கப்பறையும் கையிற்கபாலமுடன்
பச்செலும்புதின்றால் பாலொழுகுமென்றுசொல்லி
சுட்டெலும்புதின்றவளே சுடலைவனங்காத்தவளே
அக்காளுந்தங்கையரும் ஐந்திரண்டேழுபேரும்
ஐந்திரண்டேழுபேரும் அங்கேகொலுவிருந்தார்
தங்காதுபேய்பில்லி தன்பேரைச்சொன்னவுடன்

அங்காளயீஸ்வரியும் அமர்ந்துகொலுவிருந்தாள்
தொல்லேலவினே நீங்கிச் சுகுணமதையளிக்கும்
எல்லேப்பிடாரியரும் இங்கேகொலுவிருந்தார்
காவலர்கள்தாம்புகழக் கனகசிம்மாதனத்தில்
காவலதிகாரி கட்டழகிவீற்றிருந்தாள்
இந்தமனே முதலா யேழுமனேயுன்காவல்
சந்ததமுன்காவல் சாதுகுணமாரியரே
காவல்பதனமம்மா கட்டழகிமாரியரே
காவலுக்குள்ளே களவுவரப்போகுதம்மா
பாராச்சவுக்கிட்டுப் பத்திரமாய்க்காருமம்மா
தீராவினேகளேத்தான் தீர்க்குந்தயாபரியே
வாழும்பதிகளேத்தான் வந்துகாத்துரட்சியம்மா
ஏழுபிடாரியரு மிசைந்துகொலுவிருந்தார்
முத்தாலுராவுத்தன் முனேயுள்ளசேவகனும்
முற்றத்தில்வந்து முனேந்துகொலுவிருந்தார்
பூவாடைகெங்கையென்று பூரித்துக்காத்திருக்கும்
பாவாடைராயனும் பக்கங்கொ லுவிருந்தார்

சாட்சியில்லாதசிவ சங்கரியாளென் றுசொல்லி
ஆட்சியுடன்கொலுவில் அல்லவரும்வந்திருந்தார்
தேவிதிருக்கொலுவில் சேர்ந்துகொலுவிருந்தார்
ஆயிதிருக்கொலுவில் மனமகிழ்ச்சியாயிருந்தார்
வீரிக்கொலுவில் வீற்றிருந்தாரெல்லோரும்
மாரிக்கொலுவில் அமர்ந்தாரனைவோரும்
ஆலித்துத்தானிருந்தார் அம்மைதிருக்கொலுவில்
பாலித்துத்தானிருந்தார் பராபரியாள்தன்கொலுவி
ல், கூடிக்கொலுவிருந்தார் கொம்பனையாள்தன்கொ
லுவில், நாடிக்கொலுவிருந்தார் நாரணியாள்தன்
கொலுவில், சந்தோஷமாகத் தாமிருந்தாரெல்லோ
ரும், நாடுதழைக்கவம்மா நல்லோர்மிகவாழி
மாடுதழைக்கவம்மா மானிலத்தோர்தாம்வாழி
பாரிலுள்ள ஆடவரும் பாலகரும்மங்கையரும்
ஆரியரும்மற்றோரும் யாவர்களுந்தாம்படிக்க
முன்னாளில்மூத்தோர் மொழிந்தமாரிதாலாட்டை
இன்னாளிற்போற்ற எழுதாவெழுத்ததனல்